நாவுக்கரசு நற்சபை வெளியீடு க.





ஆத்தன்குடி

# ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுரர் பதிகம்.

காரைக்குடி
...டத்தில் பதிப்பிக்கப்பட்டது.

நாவுக்கரசு நற்சபையின் முதலாவது வெளியீடு.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆத்தன்குடி

# ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுரர் சந்தப் பதிகம்

# ஸ்ரீ மீனாக்ஷியம்பா கலித்துறை



இவை

ஆத்தன்குடி, சு. வீர. கதிரேசச் செட்டியார்

வேண்டுகோட் கிணங்கி

ஸ்ரீலஸ்ரீ

வன்றொண்டரவர்கள் மாணாக்கர்

காரைக்குடி.

ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியாரவர்களால்

இயற்றப்பெற்று

ஆத்தன்குடி

சு. வீர. கதிரேசச் செட்டியார்

ராம. ப. சோமசுந்தரச்செட்டியார்

இருவரால்

ஊழியன் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பெற்றது.

விபவ-௵ சித்திரை-௴

தனிலுரிய பொருண்மழைபெய் தினிதுபுரி
தருமூரிமை சாற்று கோயிலின்,
மனம் விழைபு கயல்விழியொ டுறைபரனை
யனுதினமும் வாழ்த்து வாமரோ. (௨)

தாத்தன தந்ததான தாத்தன தந்த தான தாத்தன
தத்த தனனா

ஆத்தனக ரென்ற நாமம் வாய்த்ததிது வன்றி யேனை
யாற்றிலதெ னப்ப ரமனும்,
ஆத்தன்மகிழ் தந்து வாழ வேத்துதன வந்த ராசை
யாற்பெரிது யற்று மெழில்சேர்,
சீர்த்திதிகழ் கின்ற கோயி லோர்த்தகய லங்கண் மாது
சேக்குமெயி டத்த னடியார்,
சீர்த்துரிய வின்ப மேவ வார்த்துசிவ சுந்த ரேச
தீர்த்தனடியைப்ப ரசுவாம். (௩)

தானதன தானதன தானதன தானதன தானதனனா

வாழையடி வாழையென வோதுமொழி
நேருணர வாழைவனமே,
ஊழியினு மேலெழுபு மேவிவளர்
கோவிலினி லோகைமிகவே,
எழுலகும் வாழ்வுபெற மீனவிழி
வாமமுற வேம கிறைவார்
ஆழியென வேயமரு மீசபத
தாமரைக ளாவி துணையே. (௪)

தானதன தானத்த தானதன தானத்த தானதனனா

வேதமுறை சிராத்த நாமநிறை வேவாய்ப்ப மேவு நகர்வாய்ச்
சீதவரு ளேயார்க்கு மீதலுறு மீனாட்சி தேவி யிடனார்

நாதபத நாட்கமல மீதிலுரு வேட்கைமிக நாடு மிதுவே
வதிலிக வாழ்க்கைதரு மேதைபா மோக்கநிலை யீயு நிசமே (ரு)

தான தானன தான தான தானன தான தானன தையனு

வேத வாகம மாதி நூலுரை மேன்மை சேர்நெறி சைவமே
சாத லாதிகொண் மாத வாதியர் தாவு சீவர்மெய் யெய்வமே
மாதொர் பாகரவ் வேத நாயகர் வாய்மை சார்பர தெய்வமே
ஆத லாலவர் பாத தாமரை யார்வ மேபுரி புய்வமே. (சா)

தனன தனனதன தனன தனனதன தாத்த தானன

மகுட தனவணிகர் வளரும் வழிவழிநன் மார்க்க மாகிய
நிகம முடிதெளிவெ ஹுரிய சிவநெறியி னீக்கு ரூதவர்
அகில சிவதரும வகைசெய் தொழிலரிவ ராத்த னுமநல்
நகர்செய் தளியிலுமை பதியை யளியினுள நாட்டிவாழ்வமே (எ)

தந்த தானன தந்த தானன தானன தாத்தனு

அன்பர் வாழ்வினை யின்ப மேதரு மங்க ளுளனை யாத்தனுர்
மன்பி நாகனை மின்ச டேசனை மந்த காசனை மாற்றுசோ
வன்பர் நாசனை நன்பர் நேசனை மன்று ளீசனை வாய்த்தசீர்
இன்ப ராமகிழ் சுந்த ரேசனை யென்று மாதர வேத்துவாம் (அ)

தாந்ததன தனனதன தாந்ததன தனனதன தாத்த தானனு

ஆண்டவனு மடிமைகளும் யாண்டும்விரி சிவனுமீவ
றுற்பல் வாழ்வுசார்ந்,
தீண்டுமரி யயன்முதல ராஞ்சூரு மெனமறைக
ளீற்றுமோதுமால்,
ஆண்டுமதை யறிவிலர்க ளும்பிரம மெனலொருவி
யாத்தனுரில்வாழ்,
ஈண்டுமைத னிடனுறை யாண்டவனை யனவரத
மேத்தி வாழ்கவே. (கூ)

தானதன தனனதன தானதன தனனதன தாத்த தனதனு,
காவல்புரி செயலிடரு ருதுவலி மருவிமுறை காக்க
விழையுமால்,
ஆவிவிழி தரவலிய வாழிதரு பரமனவ
ராத்த னகரில் வாழ்
தேவிகயல் விழியுமையொர் பாகனுல குயவருள்செய்
தீர்த்த னிறையவே,
ஈவணிக ரினிதுபுரி கோவிலுறை பரனைநித
மேத்தல் புரிகுவோம். (௧௦)

தய்யனத் தாந்ததன தய்யனத் தாந்ததன தாத்த தானன
தெய்வசித் தாந்தநெறி யுய்யவைத் தாண்டுமுறை
தேற்று மீசனே,
நைவொழித் தோங்கினருள் செய்வதற் காந்துணையை
நாட்டு பாகனே,
ஐவரைக் காய்ந்தவர்க ளெய்யுரித் தாந்தனியை
யாத்த னூரில்வாழ்,
சைவனைச் சார்ந்துடனி செய்தலைப் பூண்டுதுதி
சாற்றி வாழ்வமே. (௧௧)

## ஆத்தன்குடி,

## ஸ்ரீ மீனாக்ஷியம்பா கலித்துறைப் பதிகம்.

திருமகள் வாணி யயிராணி யாதிய தேவியர் தம்,
அரியய னிந்திர னாதிய கேள்வர்நின் னன்பர்பணி,
புரிதலி னின்பணி செய்துதங் கற்பைப் புலப்படுத்தக்,
கருணைசெய் துண்மகி ழாத்தன் னகரங் கயற்கண்ணியே. (௧)
உருவாதி யாவையு நீயேநின் னைதர்க்குதவுதிநீ,
அருளா லவர்தரப் பெற்றுங்கு வாமத் தமர்திறமென்
தெருளா மகளிர்கற் பின்னியல் போற்றுத தேற்றுதற்கோ,
கருமா சிரித்தரு ளாததன் னகரங் கயற்கண்ணியே. (௨)

பற்பல வண்டப் பகுதிக டந்துயிர்ப் பன்மைக்கெல்லாம்
அற்புறு தாய்நீ யவைமுற்று மோம்பநின் னன்பர்தந்த
நெற்படி யோவிரண் டன்னது மோகையி னீபெற்றமை
கற்பியல் காட்டினை யாத்தன் னகரங் கயற்கண்ணியே. (௩)

பல்கோடி சீவர்க்கு நீயே யனையென்றும் பாலிக்கின்றாய்
நல்கா யெனலெவ னன்பா வியனெனு நன்மொழியே
அல்கா நலிவினுந் தேற்றிடுஞ் செம்மணி யாங்கு நண்ப
கல்காட்டு மாளிகை யாத்தன் னகரங் கயற் கண்ணியே. (௪)

நாயகர் தந்நிலைக் கேற்புறச் சார்ந்தமை நன்னிலையே,
ஆயிழை யார்கற் பெனதேற்றி யாவிக் கருளவரன்
மேயின னெவ்வெவ் வுருவுகொண்ட வ்வவ் விளைவுக்கியை
காயமுற் றாங்கரு ளாத்தன் னகரங் கயற்கண்ணியே. (௫)

ஒளியா லுலகமெ லாமீன்ற தாயென் றுளமறைகள்
தெளிவா யுரைக்கும தீத நிலையுறு சின்மயை நீ
அளியார்பொன் மாலை மகளெனப் போந்த தருளற்கன்றே
களிகூர் திருவள ராத்தன் னகரங் கயற்கண்ணியே. (௬)

மைந்தரை நல்கி யமுதாய்ந் தருத்தி வளர்த்திவர்நின்
தந்தையென் றோர்வித் தவர்பாங் கணைவித்த றாய்கடனென்
னுந்தகை தேற்றுல கன்னே யெமையா ளெண்பதத்து
கந்துறச் சேர்த்தரு ளாத்தன் னகரங் கயற்கண்ணியே. (௭)

சீவர்பல் கோடி உடல்கொண் டுலையுந் திசைகளெங்கும்
ஆவன செய்தோம் புலகன்னை யேநினை யன்றோர் புகல்
பூவினுண் டோவறி யாச்சிறி யேமைப் புரந்தருளாய்
காவளர் சீர்திக ழாத்தன் னகரங் கயற்கண்ணியே. (௮)

சங்கரி யம்பிகை நன்பரை யின்பருள் சார்தருண
மங்களை யெங்களை யாள்சிவை நீள்செவி வார்குழைசேர்

திங்கண்மு கம்பொழி யுங்கரு ணாகரி சென்னிமதி
கங்கையர் பங்கம ராத்தன் னகரங் கயற்கண்ணியே. (௯)

பார்வதி சார்பவர் பாசவி மோசனி பால்புகலி
யூர்வதி சேயுண வேயரு ணியுல குய்ந்திடவே
சார்வதி லார்வமிக் காயுனை நல்லெனச் சாற்றலென் றுங்
கார்வதி பூம்பொழி லாத்தன் னகரங் கயற்கண்ணியே. (௧௦)

கோமளை சாமளை கோமதி மாமதிக் கோட்டிமய
மாமகள் சோமச டாதரி மாதவி மாகௌரி
தேமொழி தூபனு நாயகி தாயகி சீரருள்வாய்
காமரு நாமக வாத்தன் னகரங் கயற்கண்ணியே. (௧௧)

---

வேதசிவா கமம்வாழி மேதகுவை திகசைவம் விரிந்து வாழி
பூதிமணி யெழுத்தைந்து போற்றுகுரு சந்தானம் பொலிந்து வாழி,
சீதவளந் தருமாத்தன் றிருநகரம் வணிகர்குலஞ் சிறந்து வாழி
சோதிதரு மீனாக்ஷி சுந்தரே சுரர்கோயில் சுரந்து வாழி.

திருச்சிற்றம்பலம்.